TOTAMIL.COM
A BIWEEKLY YOUTH NEWSPAPER CIRCULATING THE GTA

# TO தமிழ்

MONDAY OCTOBRE 10 2005
VOLUME 1, NUMBER 3





## பச்சை இரத்தம் சிந்தும் -03
## இந்த வன்முறைக்கு யார் காரணம்...?



## Who is behind these wounds of hate?

STAND BY OUR ROOTS - CONTINUE OUR LEGACY

Website: www.totamil.com

Email: info@totamil.com
ads@totamil.com
edit@totamil.com

Office:
1468 Victoria Park Ave., Suite 113
Toronto, ON
M6A-2M2

Advertising Inquiries
(416) 751-5990

Fax:
416 751 7084



We at TO Tamil are very interested in hearing from fellow journalists and in receiving articles, reviews, and opinion pieces from readers. So please, if you have something you want to say and would like to see published - don't be shy – send it to edit@totamil.com.

## கடிதம்...

வணக்கம்!

Sep 23, 2005 படுகொலை செய்யப்பட்ட எமது மாணவ நண்பர்கள் சந்திரசேகர், சௌமியன் இருவருக்கும் To தமிழ் பத்திரிகையின் சார்பாக இதய அஞ்சலி செலுத்தி அவர்கள் ஆத்மாக்கள் சாந்தியடைய இறைவனை இறைஞ்சி நிற்கின்றோம்.

இந்த படுகொலையினை செய்த கொலையாளிகள் தண்டனை அடைய அனைத்து மாணவர்களும் ஒன்றிணைந்து செயல்படல் வேண்டும். இப்படி பட்ட மனித நேயமற்ற செயல்கள் நிறுத்தப்பட, வன்முறையற்ற சமுதாயத்தை உருவாக்க நாம் போராட வேண்டிய கட்டாயத்தில் நிற்கின்றோம் என்பதினை ஒருவரும் மறக்கக் கூடாது.

ஒருவனை கொல்வதில் ஒருவனை காயப்படுத்துவதில் ஒரு மனிதன் அடையக்கூடிய சந்தோஷம்தான் என்ன?

Blood into blood திரைப்படத்தில் ஒரு காட்சி:
தாய் :- (வன்முறையில் ஈடுபடும் மகனை பார்த்து) எதற்காக எமக்குள் நாம் சண்டை பிடிக்க வேண்டும், எதற்காக எம்மவர்களை நாம் கொல்ல வேண்டும். எதற்காக எங்கள் இரத்தம் தரையில் சிந்தப்பட வேண்டும்.

மகன் :- அப்படியென்றால் எம்மினத்தை தவிர்ந்த யாரையும் கொலை செய்யலாமா?

தாய் :- (வார்த்தையின்றி)

இனம் கடந்த, மொழி கடந்த நாடு கடந்த ஒரு இனம் மனித இனம். இதற்குள் விடுதலை வேட்கை வேறு. தனிமனித சுயநலம் வேறு. ஆனால் இங்கு சுயநலங்களே பொதுநலங்களாய் மாற்றப்பட்டு வன்முறையின் வழியில் வெல்ல முயல்கின்றனர்.

அப்படிப்பட்டவர்கள் அழிந்து போவார்கள்.

ஒரு தாயின் கண்ணீர், ஒரு குடும்பத்தின் வலி, இதுவ கொலைஞர்களே! உங்களுக்கு வேண்டும் மரணத்தின் மூலம் வெல்ல நீங்கள் நினைப்பது என்ன?

வெல்வதற்கு எதுவுமில்லை உங்கள் அழிவினைத் தவிர

இந்த நாடு எமக்கான வாழ்வின் வசதிகளை அளித்திருக்கிறது.

20 லிருந்து 30ற்குள் வாழ்க்கை முடிந்திடப் போவதில்லை. அதையும் தாண்டி வாழ்க்கை இருக்கிறது

இன்றைய வழி – நீங்கள் தொடர்ந்தால் நாளை உங்கள் எதிர்காலம் இருண்டு போய்விடும்.

சிந்தியுங்கள்.
நாமும் சிந்தித்து செயல்படுவோம்.

"Eye for an eye would leave the whole world blind".

**அகில்**

## Editorial

Youth violence is, unfortunately, becoming more and more common in Toronto today and recently there have been a couple of very big occurrences involving severe beatings and homicides. There are times when many of us become aware of high risk situations and are concerned for our safety or the safety of others. Regrettably, many members of our society just turn their heads, and ignore it, as if it doesn't affect them. But IT DOES! Every act of violence affects every member of the community, whether directly, or indirectly.

When asked about the causes of youth violence, teens point to peer pressure, a strong feeling of isolation, and an eroding home and family life. They say that too many parents fail to set strong examples for their children and do not play an active role in their child's life. The risk for violent and homicidal behavior can be difficult to recognize in very young children. Prior to adolescence, the major violence factors are: that the child is temperamentally difficult, has problems in socialization, and has experienced severe or repeated emotional trauma.

The possibility of violence should not be ignored or minimized. Recognizing the risk of violence is easier when you can identify the basic risk factors and the underlying motivation for violence. Communication of your concerns in terms of these risk factors can help insure an appropriate response from the media, law enforcement or health care professionals.

We all share a role in the effort to prevent youth violence. No viewpoint can be summarily dismissed. We deserve an environment free from guns, knives, and other weapons - an environment in which we do not fear harm, and a place where parents can leave their children with a true sense of security.

It is my hope that we can continue to work together, not only to identify the solutions to end youth violence but also to implement those solutions. For the sake of our young people, it is high time to restore peace.

shamini

# பச்சை இரத்தம் சிந்தும் இந்த வன்முறைக்கு யார் காரணம்..??

**TO THINK OR NOT TO THINK. THAT'S WHAT YOU DO AT UNIVERSITY, I THINK I'M A THINKER AND THERE IT'S TIME FOR ME TO JOIN THE RANKS OF EINSTEIN AND HAWKING.**

**UNIVERSITY OF WATERLOO** மாணவன் கபிலன் பாலச்சந்திரன் (19 வயது) தனது கல்லூரி ***Year Book*** ல் 1997 ஆம் ஆண்டு எழுதிய வாக்கியம் தான் அவை.

அதே ஆண்டு டிசம்பர் மாதம் 25ம் திகதி இரவு 10 மணியளவில் கபிலன் **CROSS COUNTRY DONUTS SHOP** ல் வைத்து படுகொலை செய்யப்பட்டார்.

எவருக்கோ விடப்பட்ட தோட்ட வாழ்க்கையில் ***Einstein*** போல தானும் ஒரு விஞ்ஞானியாக வர வேண்டும் என்று கனவு கண்ட இளம் மாணவனின் உயிரை பறித்து இன்றோடு எட்டு ஆண்டுகள் கழிந்து விட்டன.

செப்ரெம்பர் 23, 2005, வெள்ளிக் கிழமை அதிகாலை **CHANDRASEGAR NAGULASIGAMANY 21. SOUMIYAN NAGULASIGAMANY 19.** இளைஞர்கள் வாகனத்தால் மோதி பின் அவர்கள் மேல் ஏற்றிக் கொண்ட இன்னொரு வெறித்தனமான வன்முறை செயல் அரங்கேறியுள்ளது.

கபிலன் இறந்து இன்றுவரையுள்ள எட்டு ஆண்டுகள் இடைவெளியில் படுகொலை செய்யப்பட்ட இளைஞ ர்களின் எண்ணிக்கை, இந்த வன் முறை இன்னும் கொடூரத் தனமான முறையில் வளர்ச்சி அடைந்துள்ளதையே எடுத்துக் காட்டு கின்றது.

இந்த பச்சை இரத்தம் சிந்தவைதக்கும் வெறித்தனமான வன்முறைக்கு யார் காரணம்?

மனித இரக்கமில்லாத மிருகங்களாய் நமது இளைஞர்கள் மாறிப் போனதற்கு யார் காரணம்?

கனவுகளோடு வாழ்க்கையை வாழத் துடித்த அப்பாவி இளைஞர்களின் படுகொலைக்கு யார் காரணம்?

சொந்த தேசத்தின் போர்க் கொடுமை யிலிருந்து விலகி, தங்கள் பிள்ளை களின் வருங்காலத்துக்காய் அந்நிய தேசங்களில் தமது உணர்வுகளை புதைத்துவிட்டு உறையும் குளிரில் மாடுபோல் உழைத்து இன்று தம் பிள் ளைகளை வன்முறைக்கு பலி கொடுத்துவிட்டு தவிக்கும் இவர்களின் கண்ணீருக்கு யார் காரணம்?

காரணங்களை காட்டி விடைகளை தேடுவதற்கு முன் வன்முறையின் வழியை, அது எமது இளம் சமூகத்தில் புகுந்த முறையை சற்று நாம் ஆராய வேண்டும்.

வன்முறை எப்படி எமக்குள் ஊடுருவியது? 1993ல் நான் பாடசாலையில் படிக்கும் போது எனது நண்பன் ஒருவன் கொடூரமான முறையில் வேற்று இனத்து மாணவ னால் தாக்கப்பட்டான். இச் சண்டை இறுதியில் தலைமை ஆசிரியரிடம் சென்றது. உள்ளே போனவன் வெளியில் வரும்பொழுது இரண்டு நாட்கள் பாடசாலையிலிருந்து நீக்கப்பட்டிருந்தான். அடிவேண்டிய இவனுக்கே தண்டனை. விசாரித்த பொழுது, தனது சார்பாக வாதாட தனக்கு மொழி ஒரு பிரச்சினையாக இருந்ததாகவும், தன்னைத் தாக்கியவன் தன்மேல் முழுக் குற்றத்தினையும் சுமத்திவிட்டதாகவும் சொன்னான். மொழி தெரிந்த வேறொரு தமிழ் இளைஞனும் உதவ முன்வரவில்லை.

இரண்டு நாட்கள் பாடசாலைக்கு போக முடியாது, இதை வீட்டில் சொன்னாலும் அடி. எனவே அருகிலிருந்த ***Coffee shop*** இனுள் அவன் அடைக்கலம் புகுந்தான். அங்கு சென்றவன் இன்று சிறையில்.

முன்னால் வன்முறையாளியும், இந்நாள் குடும்பத் தலைவராகவும் இருக்கும் ஒருவரின் அனுபவமே மேற்கூறியவை.

இதை ஒரு அளவுக்கு ஒரு காரணமாக எடுத்து ஆராய்ந்து பார்த்தால் இதில் பலவிதமான உண்மைகளை எம்மால் உணர முடியும்.

எமக்குள் வன்முறை ஊடுருவிய அக்கால (1990) பகுதியில் மொழிப்பிரச்சினையால் தமிழ் இளைஞர்கள் பெரிய அளவில் பாதிக்கப்பட்டிருந்தார்கள் என்பது மறுக்க முடியாத உண்மை. அந்த உண்மை நிலையை ஆராய்வதற்கு முன் இன்னொரு வரலாற்று உண்மையை நாம் எடுத்துப் பார்க்க வேண்டும். கனடாவிற்கு அதிகளவில் குடும்பம், குடும்பமாக குடிபெயர்ந்த காலம். 80களின் பிற்பகுதி. அப்படி இங்கு குடியேறிய தமிழ் குடும்பங்களில் இருந்து ***high school*** ற்குச் சென்ற மாணவர்கள் பலர் தாயகத்தில் தமது கல்வியை தமிழில் ஆரம்பித்திருந்தார்கள்.

தமிழில் படிப்பை கனடாவில் தொடர முடியாமல் ஆங்கிலத்தில் தொடர வேண்டிய நிலை. எட்டோடு ஒரு பாடமாக படித்த ஆங்கிலத்தில் எட்டுப் பாடத்தையும் படிக்க வேண்டிய சூழ்நிலை. பல குடும்பங்கள் கல்வியறிவில் பின்தங்கிய நிலையில் (போர் சூழலினால்) தங்கள் பிள்ளைகளுக்கு உதவ முடியாத சூழ்நிலை. இப்படியான காலப்பகுதியில்தான் இவர்கள் கல்வி கற்க வேண்டிய நிலைக்கு தள்ளப்பட்டார்கள்.

இத்தோடு தமிழ் கலாச்சாரத்தில் வாழ்ந்த இவர்கள் இளமைக்காலம், இன்னொரு கலாச்சாரத்தை எதிர்கொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறது. ஆனால் அதை பின்பற்ற முடியாதிருந்தது. இன்று மாதிரி பெற்றோர்கள், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை இல்லாதிருந்ததும் இதற்கு ஒரு காரணம். இப்படியான காலம் தான் 90களின் தொடக்கம். இக் காலப்பகுதியில் பாடசாலைகளில் தமிழ் இளைஞர்கள் சந்தித்த அவ மானங்கள், உரிமை மீறல்கள் பல வற்றை நமது சமூகம் அறிந்திருக்க வில்லை. தெரிந்திருந்தாலும், அதற் கான முழுமையான செயல்பாட்டில் ஈடுபடவில்லை. இக்காரணத்தால் இளைஞர்கள் சரியான வழிகாட்டு தலின்றி, தவறானவர்களின் கையில் தங்களது பிரச்சினைகளை சொல்ல வேண்டி ஏற்பட்டது. அப்படிப்பட்ட சில பிரச்சினைகள் தீர்க்கப்பட்ட விதம், அதனால் நேர்ந்த மாற்றங்கள், பிரச்சினைகளைத் தீர்த்தவர்கள்பால் இளைஞர்களின் ஈடுபாடு அதிகரிக்கத் தொடங்கியது. அன்று எமது இளம் சமூகத்தின் பிரச்சினைகளை நமது சமூகத்தின் அமைப்புகள் அறிந்து செயல்பட்டிருந்தால், இன்று கனடாவில் வன்முறைக் கும்பல்கள் என்கின்ற அடைமொழிக்குள் நமது இளம் சமூகம் உள்வாங்கப்படாதிருந்திருக்கும் என்பது மறுக்க முடியாத உண்மை.

## பச்சை இரத்தம் சிந்தும் இந்த வன்முறைக்கு யார் காரணம்...?

பிரச்சினைகளைப் பற்றி தெரியும். இளைஞர்கள் சந்தித்த மனஉளைச்சலை புரிந்து கொள்ளவோ, உதவி செய்யவோ எத்தனை பெற்றோர்கள் தயாராக இருந்தார்கள். பணம் சேர்க்கும் விடயத்தில் அதிக கவனம் செலுத்திய பெரியவர்கள் தங்களது நேரத்தை பிள்ளைகளுக்காய் ஒதுக்கிய எத்தனை பெற்றோர்கள் நம் சமூகத்தில் இருக்கின்றார்கள்.

“எமது ஊரில் இப்படியா நாங்கள் இருந்தோம்.” என்று தட்டிக் கழித்த அவர்கள், தாம் வாழ்வது முற்றிலும் மாறுபட்ட கலாச்சாரத்தையும், வாழ்க்கை முறையையும் கொண்ட தேசம் என்பதை எப்படி மறந் தார்கள்? அல்லது இவர்களும் புரியாமல் அதை வெளியில் காட்டிக் கொள்ள முடியாமல் நடித்தார்களா?.......

“அன்று வகுப்பறையில் எல்லா மாணவர்களும் தமது மூக்கை பொத்தியபடி இருந்தார்கள். இரண்டு தமிழ் மாணவர்களையும், ஒரு தமிழ் மாணவியையும் தவர்த்து. ஆசிரியர் கேட்டதற்கு அந்த மாணவியின் மேல் காரணத்தை கூறினார்கள். அதாவது அவள் ஆடை மணக்கின்றது என்று. அவ்வளவு மாணவர்களுக்கு மத்தியில் அவமானப்படுத்தப்பட்ட மாணவியை, நான் அதற்குப் பிறகு காணவேயில்லை”.

பட்டப்படிப்பை முடித்த ஒரு முன்னாள் மாணவனின் அனுபவம் மேற்கூறியது.

இதைப் படிக்கும்பொழுது இவ்வளவுதானா என சிலர் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் இதற்கு பின்னால் இருக்கும் வலியை இவர்களால் உணரமுடியுமா? அவமானத்தை உங்களால் உணர முடியுமா?

தன் சக மாணவியை அப்படியான சூழ்நிலைக்கு தள்ளிய மாணவர்கள் மேல் தமிழ் மாணவர்கள் கோபப்பட்டதில் நியாயம் இருக்கின்றத, இல்லையா? அதற்கு காரணமானவனை இரண்டு நாட்கள் ஆஸ்பத்திரியில் இருக்க வைத்ததில் நியாயம் இருக்கின்றத? இல்லையா? அப்படிச் செய்தவர்கள் வன்முறையாளரா?

இப்படித்தான் வன்முறை எம்மில் ஊடுருவியது. எமக்கான உதவிகளை, எமக்கான உரிமையை நாம் நிலைநிறுத்த அப்படியான வழியில் சென்றோம். இதில் என்ன தவறு? முன்னால் மாணவர்கள் கேட்கும் கேள்வியிது? சரி நாம் போன வழி தவறானது எனில் நமது சமூகத்தை சேர்ந்த அமைப்புக்கள் எமக்கான உதவியை செய்யாமல் எங்கு போயின? இதுவும் அவர்கள் கேள்வி?

இவர்களின் கேள்வியில் இருக்கும் நியாயத்தை விட, இவர்கள் தேர்ந்தெடுத்த வழி தவறானது என்பதில் எந்தவிதமான மாற்றுக் கருத்தும் இல்லை. காரணம் இக்காலப்பகுதியில் பல பாடசாலை தமிழ் மாணவர்கள் வன்முறையற்ற சரியான வழியில் தமது பிரச்சினைகளை தீர்த்துக்கொண்டார்கள். ஆனால் இதைவிட இந்த இடத்தில் ஒன்றை மட்டும் எடுத்துப் பார்க்க வேண்டும். அதாவது நமது சமூக அமைப்புக்கள் பற்றி.. அக்காலப் பகுதியில் பல அமைப்புக்கள் எமது இன முன்னேற்றததிற்காகச் செயற்பட்டன. இவர்கள் செயற்பாட்டில் இளைஞர் பற்றி முன்னேற்ற செயல்கள் இருந்தது என்பது, இன்றுவரைக்கும் கேள்வியாகவேயுள்ளது. காரணம், இன்றும் இவர்கள் இளைஞர் முன்னேற்றத்தில் சரிவர செயற்பட வில்லை என்பதால்.

இப்படியாக எமது மாணவர்களின் பிரச்சினைகளுக்காய் ஆயுதமாய் இருந்த வன்முறை எப்படி எமது மாணவர்களுக்குள், எமது இளைஞர்களுக்குள் பிரச்சினைகளை உருவாக்கியது என்பதை இனிப் பார்ப்போம்.

1994 கோடை காலத்தில் ஒரு நாள். நானும் எனது நண்பர்களும் சீடப்பிறே கல்லூரியின் அருகில் இருக்கும் வாசகசாலையின் முன் நின்றுகொண்டிருந்தோம். அப்பொழுது திடீரென வந்த கார்களில் இருந்து இறங்கிய இளைஞர் களுக்கும் ஏற்கனவே அங்கு நின்ற இளைஞர்களுக்கும் இடையில் வாக்கு வாதம் ஏற்பட்டு மிகப்பெரிய அளவில் சண்டை நடைபெற்றது. அதில் ஒரு சில இளைஞர்கள் வெட்டுக் காயத்துக்கு உள்ளானார்கள். அவர்களை ஆஸ்பத்திரிக்கு எனது உயசஇல் கொண்டு சென்றேன். போகும் வழியில் விசாரித்த பொழுது யு.ம.ம புயபெ க்கும் ஏ.ஏ.வு புயபெ க்கும் இடையில்தான் சண்டை இடம் பெற்றதை அறிய முடிந்தது. அதற் கான காரணத்தை அவர்கள் கூறிய பொழுது இப்படி வெட்டுக்குத்து காயத்திற்கு போகும் அளவுக்கு இடம் பெற்ற சண்டை இதற்காகவா என எண்ணத் தோன்றியது.

றுநளவ ஏனைந இல் இருந்து இங்கு வந்த சில இளைஞர்கள் சீடப்பிறே கல்லூ ரிக்கு சென்றிருக்கிறார்கள் அங்கு பெண்களோடு கதைத்திருக்கிறார்கள். அதைப் பார்த்த ஒரு இளைஞன் தனது கல்லூரியில் படிக்கும் பெண் களோடு இவர்களுக்கு என்ன கதையென, அவர்களோடு வாக்குவாதப் பட்டு இறுதியில் அடித்திருககிறார். தனது நண்பர்களோடு சேர்ந்து இதற்கு பழிவாங்கவே றுநளவ ஏனைந இல் இருந்து இங்கு வந்து இவர்களை அடித்திருக்கிறார்கள். பழிக்குப் பழி வெறும் சாதாரண காரணத்துக்காய். இதில் எவ்வளவு உண்மையிருக்கிறது என்பதனை என்னால் உணரமுடியாவிட்டாலும், இப்படியான காரணங்களுக்காகவா இவர்கள் அடிபட்டார்கள்? என்பது கவலைதரும் விடயம் என நினைவு கூருகிறார்கள் முன்னாள் மாணவர் ஒருவர்.

மேற்சொன்ன கதைதான் தமிழ் இளைஞர்களுக்கு இடையில் இடம் பெற்ற முதல் வன்முறைத்தனம் என சொல்லிவிட முடியாது. ஆனாலும் பொது இடத்தில் இடம்பெற்ற சண்டை அதுவும் பெரிய அளவில் என்பது இதுதான் எனலாம் என்கிறார், இன்னொரு மாணவன்.

தவிர்க்க முடியாத காரணங்களுக்கா கவும் (அப்படி என்ன தான்) எமது மாணவர்களின் பிரச்சினைகளுக்கான உடனடித் தீர்வாகவும் தொடங்கப்பட்ட வன்முறை ஒருகாலப் பகுதியின் பின்னர் நமது இளைஞர்களுக்குள்ளேயே யார் பெரியவன் என்கின்ற நபழ (வறட்டு கௌரவப்) பிரச்சினையால் பிரதேசங்கள் பிரிக்கப்பட்ட (**WEST AND EAST A K KANAN GANG – VVT GANG**) பிரிவினைவாத வழியில் வளரத் தொடங்கியது 94இன் பின்னர்.

இவர்கள் உருவாக்கி வைத்த வன்முறைக் கலாச்சாரம் அதற்கு இவர்கள் “மாணவர்கள் பிரச்சினையெனும்” பொய்யான வடிவத்தை கொடுத்து தமது தனிப்பட்ட சுயநலங்களுக்காய், பல மாணவர்களின் எதிர்காலத்தையே கேள்விக் குறியாக்கியுள்ளார்கள் என்பது தவிர்க்க முடியாத உண்மை.

## பச்சை இரத்தம் சிந்தும் இந்து வன்முறைக்கு யார் காரணம்...?

இவர்கள் உருவாக்கி வைத்த வன்முறைக் கலாச்சாரம் அதற்கு இவர்கள் "மாணவர்கள் பிரச்சினையெனும்" பொய்யான வடிவத்தை கொடுத்து தமது தனிப்பட்ட சுயநலங்களுக்காய், பல மாணவர்களின் எதிர்காலத்தையே கேள்விக் குறியாக்கியுள்ளார்கள் என்பது தவிர்க்க முடியாத உண்மை.

ஒரு இரு மனிதர்களுக்காய் ஒட்டு மொத்த தமிழ் இளைஞர்களுக்குள் வன்முறை கலாச்சாரத்தை வீசிய அந்த ஒரு இரு மனிதர்கள் இப் பொழுது எங்கே? வன்முறையினால் அழிக்கப்பட்டுவிட்டார்களா? அல்லது வன்முறையை விட்டு விலகி விட்டார்களா? அல்லது பகைமை மறந்து நண்பர்களாகி விட்டார்களா? எது எப்படியோ, இன்று எமது இனத்தின் பெயரில் இந்த மண்ணில் நடக்கும் அத்தனை குற்றச் செயல்களுக்கும் இந்த மூதாதை யோரே காரணம்.

எத்தனை படுகொலைகள், இதனால் இவர்கள் சாதித்தது என்ன? சாதிக்கப் போவதுதான் என்ன? வேலைக்குப் போகாமல் அரசாங்க உதவிச் சலுகையில் ஊதாரித்தனமான வாழ்க்கை வாழ்ந்த இவர்கள், தலைவர்களாக எமது இளம் சமூகத்துக்கு அடையாளமாகிப் போனதுதான் கவலைக்குரிய விடயம். இனத்துக்காய், விடுதலைக்காய், விதையான மனிதர்கள் எமது வாழ்வின் முன்னோடிகளாய் மாறவேண்டிய இடத்தில் இங்கு வாழும் பல இளைஞர்களின் மனதில் இவர்கள் இடம்பெற்றது இந்த வன் முறையின் வடிவத்தை அது எவ்வளவுக்கு சுலபமாக ஒரு மனிதனை மிருகமாக்கும் என்பதை அறியக்கூடி யதாகவுள்ளது.

இப்படியான வன்முறை கலாச்சாரம் எமது இளம் சமூகத்துக்குள் ஊடு ருவக் காரணமானவர்கள் யார் எனப் பார்க்கும் பொழுது இரண்டு தரப்பினர் முதலில் வருகின்றனர்.

1. குடும்பம்
2. சமூகம் (எமது)

குடும்பம் என்பது யாதெனில் :
ஒரு மனிதனின் தொடக்கம், அவன் அவள் முதல் பள்ளி, அன்பு என்னும் அகிம்சையின் அடையாளம். எனக்கூறிக் கொண்டே போகலாம். இப்படிப்பட்ட குடும்ப அமைப்புத் தான் எங்களது அமைப்பு. இந்த வடிவம் இப்பொழுது இருக்கின்றதா? இந்த வாழ்க்கை முறை இப்பொழுதும் எமக்குள் இடம் பெறுகின்றதா? மூடத்தனமான பொய்க் கலாச் சாரத்தில் சிக்குண்டு சிதறிப்போன வடிவமே எமக்குள் குடும்ப அமைப்பாக மாறிப்போயிருக்கின்றது. இல்லாத ஒன்றை இதுவும் எமது கலாச்சாரம் எனப் பொய் பிதற்றும் பிற்போக்குவாதிகளின் கையில் அகப்பட்ட அமைப்பாகவே இன்று குடும்பம் மாறிக் கொண்டிருக்கின்றது.

ஒரு சாதாரண கேள்வி, ஒரு குடும்பத்துக்கு எவை முதலில் அவசியம்?

அன்பான அம்மா, அப்பா. அவர்கள் பாசம் கொண்ட பிள்ளைகள். இருக்க ஒரு அழகான இல்லம், வாழ வாழ்வுக்கு தேவையான தேவைகள்.

இப்படியான இன்றைய தேவைகள் பணத்துக்காய், பகல் இரவு பாராத உழைப்பு, உறவுகளை மறந்த இறந்த கால வாழ்க்கை, அளவுக்கு மிஞ்சிய தேவை, உழைப்பை மீறிய பேராசை, என அடுக்கிக்கொண்டே போகலாம். பெரிய வீடு, ஆனால் ஒரு விளக்கு மட்டும் எரியும். அந்த வீட்டுக்கு ஏற்றதுபோல வாகனம் இல்லை யெனில் மதிப்பில்லை. இப்படி உங்கள் பகட்டு வாழ்க்கைக்கு பலியாகிப் போனது யார்? பெற்றோர்களே சிந்தியுங்கள்!

பிள்ளைகள் பெறும்வரை வாழ்க்கை உங்களுக்கானது. பெற்றுவிட்டால் வாழ்க்கை அவர்களுக்கானது. அவர்கள் கனவுகளே உங்கள் கனவுகளாக மாறவேண்டிய இடத்தில் உங்கள் கனவுகளை அவர்கள் மேல் திணிக்கும் நீங்களும் வன்முறை யாழிகளே! எத்தனை இளம் சமூகம் தங்களது வாழ்க்கையை தாங்கள் வாழ்ந்திருக்கிறார்கள். படிக்க நினைத்தது வேறு, படித்துக் கொண்டி ருப்பது வேறு. இதுதான் இன்றைய இளைஞர்களின் நிலை. உங்கள் கௌரவத்துக்காகப், உங்கள் மான மரியாதைக்காய் உங்கள் பிள்ளை களின் உணர்வுகளை அழித்த நீங்களும் கொலையாளிகளே!

தன் தாயை மிருகம் போல் தாக்கும் தந்தையை காணும் இளம் பிள்ளையின் மனதில் மகிழ்ச்சியா தோன்றும்? குடித்துவிட்டு ஊர்க்கதை பேசும் உங்கள் ஈனச் சொற்களை கேட்கும் இளம் பிள்ளையின் மனதில் சமத்துவமா தோன்றும்.?

ஓசியில் கிடைத்த தொலைபேசியில் ஊரார் குடும்பங்களை பிரிக்க முயலும் அம்மாக்களை பார்க்கையில் என்ன சமூக சேவை செய்யும் எண்ணமா இளம் சிறார்களுக்கு தோன்றும். இப்படியாக முன்னோடிகளாய் இருக்கும் நீங்களே எமக்கு கற்றுத் தந்தீர்கள் அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் அதனால் தான் என்ன இன்றைய இளம் சமூகத்துக்கு தெய்வ நம்பிக்கையே இல்லை.

முதல் பிழை, முதல் வன்முறை, முதல் சமூக சீர்கேடு. ஒரு குடும்பத் திலிருந்துதான் தொடங்குகிறது என்பதற்கு எமது கனேடிய குடும்ப ங்கள் பல சாட்சியமாய் இருக்கின் றது.. இப்படியாக குடும்பத்தில் சீரழிந்துபோன இளைஞன் சமூகத் துக்கு வருகின்றான். இங்கு இந்த சமூகம் அவனுக்கு எதை கற்றுக் கொடுக்கின்றது என்பதை இனிப் பார்ப்போம்.

சமூகம் தனி மனிதனின் அடையாளம் குடும்பமெனில் ஒரு இல்லத்தின் அடையாளம் சமூகம். ஒரு இனத்தின் கலாச்சார மையம் சமூகம். இப்படிப்பட்ட சமூகமாக நமது சமூகம் இருக்கின்றதா? நீங்களே சொல்லுங்கள்? போட்டி, பொறாமை, நான் நீயென ஏற்றத்தாழ்வுகளின் மையமாக இருக்கின்றது எமது சமூகம் என சொல்லிக்கொள்ளலாமா? நீங்களே சொல்லுங்கள்?

சொந்த தேசத்திலிருந்து அகதி (எதிரிகலால்) புலம்பெயர்ந்த நாம், ஒரு குடையின் கீழ் ஒரு அமைப்பின் கீழ் ஒற்றுமையாக இயங்குவதை விட்டு விட்டு என்ன செய்து கொண்டிருக்கின்றோம்? கிட்டத்தட்ட 300000 தமிழ் மக்கள் வசிக்கும் இந்நாட்டில் எத்தனை அமைப்புக்கள்? சரி அமைப்புக்கள் இருக்கட்டும், செயற்படட்டும், சமூக முன்னேற்றத்துக்காய் பாடுபடட்டும் ஆனால் அதுவா இவர்கள் செய்கிறார்கள்?

## பச்சை இரத்தம் சிந்தும் இந்த வன்முறைக்கு யார் காரணம்...?

எத்தனை விதமான பிரிவினை வாதங்கள், ஈழத்தவன் என்கின்ற அடையாளம் போய் ஊரின் பெயரில் அமைப்புக்கள், இவை அவசியமா? நாட்டை கட்டியெழுப்புவதை விட்டு ஊரை முன்னேற்ற முயற்சிகள் நாடு இல்லாத ஊர் எங்கிருந்து வரும்? சொந்த நாட்டின் விடுதலைப் போரையே வெறும் நயளவ பூக வஅைந என்று சொல்லித் திரியும் அதிமேதாவிகள் ஊரின் கண்ணீரில் குளிர்காய நினைக்கும், முதலாளித் துவ முதலைகள் மாணவ சக்தியை வியாபாரமாக்க நினைக்கும், வியா பாரக் கழுதைகள். இப்படியான அசிங்கங்களின் அமைப்புக்களாய் நாம் நமது சமூகம் மாறிக்கொண்டிரு க்கின்றது என்பதில் எந்தவிதமான மாற்றுக் கருத்தும் இல்லை.

வட்டிக்காசு வசூலிக்க நமது இளைஞர்களை வன்முறைக்கு ஏவிய வியாபாரிகள் நல்லவர்கள், ஆனால் இளைஞர்கள் வன்முறையாழிகள். எவ்வளவோ திறமையிருந்தும், வாய்ப்பில்லாத இளைஞர்கள் உழகைநந கடைகளில், திறமையற்ற பிற்போக்கு நிறைந்த அதிபுத்திசாலிகள் மேடை களில், இவர்கள் முழக்கம் என்ன? இளைஞர் வன்முறையில் ஈடுபடு கிறார்கள். ஆனால் அவர்களை திருத்த நல்வழிப்படுத்த இவர்கள் முன்வந்தார்களா? பேசுவது மட்டுமே அவர்கள் செயல், மற்றதில் எல்லாம் சுயநலம். இந்த சுயநலச் சமூகத்தில், இளைஞனால் எதை கற்க முடியும்? எதை பின்பற்ற முடியும்? யோசித்து பாருங்கள். நூற்றுக்கு மேற்பட்ட அமைப்புக்கள் இருந்தும் என்ன பயன். இளைஞர் வன்முறை தொடர்கிறது, படுகொலைகள் கூடிக் கொண்டே போகிறது. இந்த ஆண்டில் மட்டும் கனடாவில் நடந்த கொலைகளில் ஐந்துக்கும் மேற்பட்டவர்கள் தமிழ் இளைஞர்கள். ஒரு சிறுபான்மையினத்தின் விகிதாசாரத் தில் பார்க்கும் பொழுது இது அதிகம். இதற்கு யார் காரணம்? குடும்பமா? சமூகமா? அல்லது தனிப்பட்ட மனித ர்களா? இல்லை சமூகத்தால் உரு வாக்கப்பட்ட அமைப்புக்களா?......

1998 பிற்பகுதி இரவு 1 மணியளவில் வேலை முடிந்து வழக்கமாக நண்பர்களை சந்திக்கும் உழகைநந ளாழி ற்கு வருகின்றேன். நண்பர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் மத்தியில் 16 வயது நிரம்பிய தமிழ் பெண், விசாரித்த பொழுது வீட்டை விட்டு ஓடிவந்து விட்டதாக சொன்னார்கள். இந்த நடு இரவில் இவள் இங்கு இருக்கக் கூடாது என்று நானும் எனது நண்பர்களும் அக்காலப் பகுதியில் உருவாக்கப்பட்ட இளையோர் அமைப்போடு தொடர்பு கொண்டோம். விடயம் விளக்கப்பட்டது, வருவதாக வாக்குறுதி தரப்பட்டது, காத்திருந்தோம், அவர்கள் வருவார்கள் என்பதற்காய். அந்த பெண்ணை தனியாக விட்டுச் செல்ல எமக்கு மனமில்லை. காரணம் எங்கள் நண்பர்களுக் கிடையில் சிலர் மேல் எமக்கு நம்பிக்கையில்லை. காலை 4 மணி வரை யாரும் வரவேயில்லை. அதற்கு மேல் என்னாலும் இருக்க முடியாது. நான் போய்விட்டேன். அன்று இரவு நண்பர்களை சந்தித்து கேட்ட பொழுது யாரும் வரவில்லையென்றும் விடிந்து விட்டதுதானே என தாங்களும் போய்விட்டதாக கூறினார்கள். அவள் என்ன ஆனாள் என எமக்கு தெரியாது. ஒருவேளை அவர்கள் வந்திருக்கலாம். நீண்ட நாட்களுக்குப் பிறகு நான் கேள்விப் பட்ட செய்தி (மன்னிக்கவும் பச்சையாக சொல்லப் போகின்றேன்) இந்தியாவின் சநன டபைாவ ளவழசல க்கு இணையாக இருந்தது. அவள் கெட்டு விட்டாள். அல்லது கெடுக்கப் பட்டாள், அல்லது அவளை நினை விழக்கச் செய்து கற்பளிக்கப் பட்டாள். என்பதே. மேற்கூறிய வைகளை அவள் விரும்பிக்கூட செய்திருக்கலாம் ஆனால்.. 16 வயது நிரம்பிய இளம் தமிழ் பெண்ணின் எதிர்காலம்..?

அமைப்புக்கள் சரிவர செயற்படாத பொழுது இடம்பெறும் வேதனையான நிகழ்ச்சிகளுக்கு என் நண்பன் சொன்ன கதைதான் இது. இலட்சியத்தோடு இறங்கினால் முழுமையாக செயற்படுங்கள் என்பதே அமைப்புக்கள் பால் நாம் வைக்கும் வேண்டுகோள். நான் சொன்ன அமைப்பு பல வகையில் பல நல்ல அமைப்பாளர்களின் கீழ் செயற்பட்டு நல்ல முயற்சிகளை செய்திருந்தது. இருப்பினும் யார் மீது நாம் நம்பிக்கை வைக்கின்றோமோ அவர்கள் பிழைவிடும்பொழுது மன்னிப்புக்கு இடமேயில்லை.

CANTYD. இதன் பாதை என்ன இப்பபொழுது? கிடைக்கும் உதவி தொகையை வைத்து நமது இளம் சமூக முன்னேற்றத்துக்கு என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? ஒரு காலத்தில் மிக வேகமாக இயங்கிய இந்த அமைப்பு, இன்று முழுமையான செயற்பாட்டில் இல்லாமல் போனமைக்கு என்ன காரணம்? இளம் சமூகத்தோடு தொடர்பில்லாத வன்முறை பற்றி, இதில் ஈடுபடும் இளைஞர்களின் சரியான பிரச்சினை தெரியாத சிலர் இந்த அமைப்பின் அமைப்பாளர்கள் ஆவது சரியா? ஊயவெலன மேல் கேட்கும் கேள்வி களுக்கு காரணம் இருக்கின்றது. இன்று கனடாவில் தமிழ் இளைஞர் முன்னேற்றத்துக்கு TYO போன்ற அமைப்புக்கள் செயல்பட்டு வந்தாலும் அரசாங்கம் மற்றும் பிற நல சமூக அமைப்புக்களின் உதவி கிடைக்கும் ஒரு அமைப்பு இதுவென்பதால். அவ் உதவியை வைத்து பல விடயங்கள் செய்ய முடியும் என்பதால்.

மீண்டும் தலைப்புக்கே வருவோம். இந்த பச்சை இரத்தம் சிந்தும் இந்த வன்முறைக்கு யார் காரணம்?

தனிப்பட்ட மனிதர்களா? குடும்பங்களா? சமூகமா? யார் எப்படி ஆராய்ந்து பார்த்தாலும், இறுதியில் நாம் வந்து நிற்பது இன்றைய நிலைக்குத்தான். அப்படியானால் இதற்கு என்ன வழி, இது மாற வேண்டும், இன்றைய நிலை அடியோடு மாற வேண்டும். நான் என்கின்ற நிலை மாறி நாம் என்கின்ற நிலை தோன்ற வேண்டும்.

முன்னால் வன்முறையாளிகளினால் உருவான பிரச்சினையை அவர்கள் முன்வந்து சமாதான முறையில் தீர்க்க பாடுபட வேண்டும். இல்லை எனக்கு என்ன, நான் விலகிவிட்டேன், என நினைத்தால் காலம் அவர்களுக்கு பதில் சொல்லும் அவர்கள் பிள்ளைகள் ரூபத்தில்.

நமது இளம் சந்ததியின் வருங்கால வாழ்விற்கு எல்லோரும் சேர்ந்து செயற்பட வேண்டும். வன்முறை வன்முறையாளியை மட்டும் அழிக்கவில்லை. அப்பாவிகளையும் தான் “எனக்கு என்ன என்ர மகன் அப்பிடியில்லை”யென இருந்தால், நாளை நீங்களும் கண்ணீர் சிந்த வாய்ப்பிருக்கிறது.

## பச்சை இரத்தம் சிந்தும் இந்த வன்முறைக்கு யார் காரணம்...?



ஒரு இனத்துக்குள் புகுந்த வன்முறை,
இனத்தையே காவு கொள்ளும்,
சிந்தியுங்கள் பெற்றோர் களே!
சமூகமே!......

எங்கிருந்து ஆரம்பிப்பது என எண்ணுகிறீர்களா? ஆரம்பியுங்கள் உங்களிலிருந்து. உங்கள் விதண்டா வாதங்களை தூக்கியெறியுங்கள். உங்கள் கௌரவத்தை விட்டுக் கொடுங்கள். இவைகளை யாருக்கு நீங்கள் செய்யப் போகிறீர்கள்? உங்கள் பிள்ளைகளுக்கு, ஏனெனில் அவர்களை நீங்கள் வாங்கவில்லை, உங்களிலிருந்து உருவாக்கினீர்கள். உங்கள் எதிர்காலம், அவர்களின் எதிர்காலக் கனவோடு இணையட்டும்.

குடும்ப உறவை, அதன் புனிதத்தை நாம் நமது சந்ததிக்கு எடுத்துச் சொல்வோம். அவர்களை அவர்கள் சந்ததிக்கு எடுத்துச் சொல்வார்கள்.

சமூகமே உலகின் நாளை நம்பிக்கை. இன்றைய இளைஞன் என்பதை வாய்வழி மட்டும் சொல்லாதே. அதற்கான வழியை வகுத்துக் கொடு. திறமைகளை தேடிக் கண்டுபிடித்து மேடைகளில் ஏற்று, வீதியிலும், கோப்பிக் கடைகளிலும், நிற்பவனை தேடிப்போ. அவன் சக்திக்கு மீறிய பொறுப்பைக் கொடு, உறுதியோடு உழைப்பான். எமது இனம் சமூகம் என பெருமை கொள்.

எமது விழுமியங்களின் வழியில் பண்பாட்டின் விழுதில் நிலைக்க நான், குடும்பம், சமூகம் என செயற்பட வேண்டும்.

இல்லையேல்....

பச்சை இரத்தம் சிந்தும் இந்த வன்முறை தொடரும், அநியாயமாக அப்பாவி இளைஞர்கள் மரணிப்பார்கள். பிள்ளைகளை இழந்து பெற்றோர்கள் பரிதவிப்பார்கள் நமது இனம் மனித முகம் இழக்கும், மிருகங்களாய், வெறிகொண்டு அலையும், காமத்துக்காய் உடலை இழப்பார்கள் எமது இளம் பெண்கள். விபச்சாரம் பெருகும், விவாகரத்து நுழையும் ஒரு பிள்ளைக்கு நாலு தாய், நாலு அப்பன் என எமது இனம் கலாச்சாரச் சீரழிவைக் மறுமலர்ச்சி காணும். ஒருத்தனுக்கு ஒருத்தி போய், ஒருத்திக்கு நாலு ஒருத்தனுக்கு பத்து என மாறும். இன்று ஆரம்பத்தில் நிற்கின்றது. இதை பிடுங்கி எறியாவிடில் நாளை கனடாவில் தமிழ் இனம், பெயரவில் மட்டுமே இருக்கும்.

மொழியற்ற, கலாச்சாரமற்ற, பண்பாடு மறந்த பரதேசிகளாய் மாறும், மாறும். இது ஏற்படக் கூடாது எனில்

உனக்குள்ளிருந்து

—யாசகன்

## T.O. Student's Voice: Reconstructing Society.

Tamils, we come from the far side of the world, all the way to Canada seeking protection, shelter, and prosecution from our enemies; enemies who solely despise us for being Tamil. Almost all our people have been dispersed into each corners of the globe and have managed to find places to call "home" through their hard-work yielded by their blood and sweat.

Yet it's still in our nature to wonder when we can go back to where we came from, even if we were born in foreign lands. Our yearning for our homeland has not perished. Many of the Tamil youths that dwell within foreign countries like our Canada, are not the first migrants here, rather it is their parents who are the first migrants. These parents should stand in tribute to the accomplishments which they have made towards our Tamil society which it stands today; it is through their hard-work were we allowed to flee from the threat of war in our homelands where we are welcomed by Canada and other free-living states.

The least we can do with our lives now here is to contribute to the well-being of our society. In fact, we are in a position by being in Canada to contribute to the wellbeing of this world. Nations throughout the globe felt pity for us for the state and condition our people were in, the turmoil that wrought within our country and because of their sympathy, we have been given asylum amongst their lands for us to flourish where we would not have been if we had been living there.

Instead of showing them what wonders our people are capable of, Tamil youths have undermined the sweat and tears of their parents and are giving the world a reason to wonder why they brought us in the first place. It is a puzzling question of why there is so much Tamil violence occurring within our society. Tamil youths or Tamils, for that matter, should not be proud of themselves while reading this. They should have some sense of realization. It is hoped by your parents that when they fled their homelands for a reason that reason was primarily their family, let it be that their lives be not wasted instead let them know that being a Tamil in Canada is not to be represented as a fearsome, grotesque, animalistic and uncivil person.

A Tamil should be able to walk anywhere and be respected not for the violence they spread, but for the greatness that we are capable of. Where it began, we don't know, but why should it continue? There are many of us here working day and night to set things right for our community, and then there is that few that destroys every respect we earn and brings us down to levels which degrade our society. Unfortunately, we live in a society where the media and the people only remember you when you commit ferocious actions, and so far some of us have stepped many boundaries which appear very barbaric by western standards. Our community, just like any other in this world, has many strengths and attributes, but the only ones that stand out are the ones with the thirst for violence and public disturbance.

From back home we got chased out with one common enemy and it made sense why we are suffering, but to come to a foreign country and fight our community? There is nothing disappointing and disgusting like that. Outsiders don't look at us negatively because they hate us. They look at us that way because we've made ourselves to be this way. Instead of joining hearts as one unified people, brothers and sisters at peace, we turn against each other in this time when we can only depend on one another. This doesn't even have to happen.

The struggles of our country exist, yes this is a fact, but why do we struggle here to find a proper footing? We need not resort to violence like in our homelands when we live in a place with opportunities, freedom, and endless possibilities. Let us leave our violent struggle that is ongoing in our homelands and embrace in a more humane, and peaceful path to retribution within ourselves, towards society, and for Sri Lanka.

By Salini Francis-Xavier and Mugunthan S Selvakumaran

# Review of Shyam Selvadurai's Funny Boy




There are two distinct features about the novel, *Funny Boy*: One, it is written by a young Sri Lankan Tamil man, Shyam Selvadurai, and two, the main character and narrator of the novel is a homosexual boy, also of Sri Lankan Tamil decent. Although it is a fictional novel, there is reason to believe that the life of the gay boy is not very different from the childhood of Selvadurai, himself.

The story takes place in Colombo, Sri Lanka, in the midst of the Sinhala-Tamil conflict of the early 1980s. The main character, Arjie, struggles through this political battle as well as the social battle of being one of the very few homosexual boys in Sri Lanka. The story begins with Arjie playing 'wedding' with his female cousins while his brother and male cousins play cricket out on the field. He and his female cousins re-enact a wedding ceremony and each would assume a role such as the bride, groom and flower girls. Arjie absolutely despises the role of the groom and would always assume the role of the bride. He loves sneaking into his mom's room and trying on her sarees and makeup. As these interests are obviously unusual for a boy, Arjie was soon called 'funny boy', which is what inspired the title of the novel. Although those around him notice that he is very different from a 'normal' Tamil boy, Arjie does not discover his sexual origin until late adolescence.

There are many incidences in the novel that accurately depict some of the obstacles Tamils must face in the Sinhalese dominated city of Colombo. As he is from an upper middle class family, Arjie is able to afford a good education at a prestigious all boys private school. However, Tamil people are not held in the highest regard at this school, and Sinhalese and English are the only recognized languages. Tamil students try as best as they could to conceal the fact that they are Tamil and try to blend into the Sinhalese culture to avoid bullying and harassment. Arjie's aunt in the novel is brutally assaulted by Sinhalese army men during a riot in Jaffna for the sole reason that she is Tamil.

**FUNNY BOY**

Selvadurai is successful in opening people's eyes to many issues in Sri Lanka- whether political or social - that are not widely known or accepted. For example, the issue of homosexuality is not commonly discussed among the Tamil community.
However, in this novel, Arjie's homosexuality and his physical relationship with his boyfriend is very explicitly recounted. It is almost shocking to read. Introducing something so controversial in his debut novel was taking a huge risk for Selvadurai; however, it was a risk worth taking as his novel is hugely successful, claiming several awards in Canada, U.S. and the U.K. It has even become part of school syllabus and students are actually required to read it. With such a victorious first attempt, Selvadurai went on to work his magic with his second novel, *Cinnamon Gardens*. Hopefully, this novel is as, if not more, remarkable than the first.

Thusha Tharmalingam



*About the author:*
*Shyam Selvadurai was born in Colombo, Sri Lanka, in 1965 and moved to Canada at the age of 19 with his family after the 1983 riots. He graduated from York University with a B.F.A. in literature. He has written two books, several articles and even scripts for television. His second novel, Cinnamon Gardens has been translated into 6 different languages - Italian, French, German, Danish, Spanish and Hebrew. He is now 40 years of age and currently lives in Toronto.*

# THE REALITY OF GANGS

## What's the Deal With Gangs?

Gangs are neither just a big city or inner city problem, nor are they a problem of a particular race or culture. Gangs cross all ethnic, racial, socioeconomic, gender, and geographic boundaries. They bring fear and violence to neighborhoods, traffic in drugs, destroy property, involve youth in crime, and drive out businesses. Gangs pull teens away from school and home into a life of violence.

One of the scariest aspects of gang violence is it's often indiscriminate and unpredictable. Gang members have been known to kick, punch, hit, or even kill their victims. People get hurt if they are in the wrong place at the wrong time. If gangs or gang members are in your school or neighborhood, you know it.

## Learn About Gangs

- Gangs can be organized around race or ethnic group, money making activities, or territory.
- Gangs usually claim a particular area of town which they call their "turf." They spend much of their time fighting rival gangs to keep them out of this territory.
- Most gang members are males ranging in age from 8 to 22 years old.
- Females, especially Asian and Hispanic, are moving away from the traditional role of being merely girlfriends of gang members and are forming their own gangs.
- Gangs wear particular items, styles, brands, or colors of clothing. Some gangs wear bandannas of a certain color or baseball caps of a specific team. Some gangs mark their bodies with tattoos with their gang symbol or name.
- Gangs often use special hands signs or handshakes to tell others the gang to which they belong.
- "Gangsta" rap paints a realistic picture of daily gang activity. The lyrics glorify violence, abuse of women, and disrespect for authority, especially the police.
- Contrary to what you may think, gangs are not around to help you. These groups of young people break the law, beat up people, and murder.

## Why Do Young People Join Gangs?

What causes some teens to join gangs? Among the most common reasons are to

- belong to a group
- receive protection
- earn money
- end boredom and seek more excitement
- be with friends and be more popular.

For some it is even a family tradition.

None of these reasons are good reasons to belong to a gang. Most of the other kids who don't belong to a gang will be afraid of you and won't hang out with you. If you think you will be safer joining a gang, you're wrong. Most likely, you will increase your chances of being injured or killed. Think you'll be rich? Not likely. Over a lifetime, gang members make far less money than those who are not in gangs. And by joining you usually don't end up with a good education, making it hard to find a good job.

## Join a Gang?

Joining a gang is like entering enemy territory. Belonging to a gang has a warlike existence where beatings and shootings happen all the time. Typical scenarios of joining a gang involve violence and rape.

- Boys usually have to fight several other gang members at the same time — this is called being "rolled-in" or "walking the line."
- Girls may be forced to have sex with several gang members or fight other female gang members.
- New members may be required to prove themselves by beating up an innocent person, robbing a store, or shooting someone — including
- drive-by shootings. If you break the rules after joining a gang, your punishment may be death.

## What Does the Future Hold for a Gang Member?

Gang membership can severely hurt one's health and future.

- Gang members may be killed or injured.
- Many put themselves in danger of disease, prison, and death.
- Many become dependent on alcohol and drugs.
- Gang members usually drop out of school, limiting their chances for higher education or good employment.
- They are likely to be involved in crime throughout the rest of their lives.
- They may commit serious and violent crimes that lead to lengthy jail time.
- Once you are in a gang, it's not easy getting out. You may risk your life if you leave a gang.

## Take Action

- If you are threatened by gang members, don't overreact. Stay cool and try not to act scared.
- Ignore their threats and tell them you have no argument with them.
- If threats from gangs continue, tell your parents, the police, or school officials.
- Don't be a "wannabe" by dressing or acting like you want to be in a gang.
- Hang out with kids who are not involved and don't want to be in a gang.
- Get involved in activities that are not gang-related, such as organized sports, summer jobs, community organizations, volunteer groups, faith groups, or arts and drama groups.

**Start showing gangs you have zero tolerance for their activities. You can**

- start a graffiti clean-up program in your community
- start a youth group or club whose purpose is to improve the neighborhood or school.

-Shamini

